


# ஆத்மார்த்த அந்தரங்க வழி

இயற்றியவர் :-

**Dr. K. M. P. முகம்மது காசிம், Ph. D.,**

(தாளையான் ஆத்மார்த்த அந்தரங்கக்
கூட்டத்தவரும், சாந்தி நிலையத்தின்
ஸ்தாபகரும் தலைவரும்.)






# ஆத்மார்த்த அந்தரங்க வழி

இயற்றியவர் :-

**Dr. K. M. P. முகம்மது காசிம், Ph. D.,**

(தாளையான் ஆத்மார்த்த அந்தரங்கக்
கூட்டத்தவரும், சாந்தி நிலையத்தின்
ஸ்தாபகரும் தலைவரும்.)





பிரஹ்மஸ்ரீ செய்கு நெய்னு முஹம்மது
(தாஸியான் ஆண்டவர்கள்)

# ஆத்மார்த்த அந்தரங்க வழி

## முகவுரை

மனம் போல வாழ்வு என்னும் பழமொழிக் கேற்ப, சுத்த மனத்தால் தூயவாழ்வும் அசுத்த மனத்தால் மலின வாழ்வும் உண்டாகின்றன. மனம், மனம், என்று பல தடவை நாம் கூறுகிறோம். ஆனால் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்து உண்மையை அறிபவர்கள் சிலரே. மனத்தின் உண்மை ரூபத்தை ஆராய்ந்தறிந்த விடத்து அறிவுந் தெளிவும் ஏற்பட வழிபிறக்கிறது.

மனம், நினைவு, எண்ணம் ஆகிய சொற்களின் அர்த்தம் பொதுவாக ஒன்றே. மனிதனின் மனஞ் சஞ்சலம் நிறைந்த, பரபரப்பை ஊட்டும் புலன்நுகர்ச்சிகளுடன் கூடிவெளியிற்சஞ் சரிக்கிறது. ஐம்புல இச்சைகளை நாடியோடிக் கலங்கித்திரியும் மனம் அமைதியின்றி வாழ்கிறது. சாந்திநிலை ஏற்படுவது மிகவும் அரிது. வாழ்க்கையில் மேலும் மேலும் பிரச்சனைகளைக் கிளப்பிச் சாந்தத்தைக் குலைப்பது மலினமடைந்த மனமே. அசுத்தமனமே வாழ்வின் துன்பத்துக்கு மூலகாரணம். எந்தப் பிரச்சனைகளையும் மனவசைவின் வேகத்தினால் தீர்த்து விடமுடியாது. தீர்த்து விடமுடியுமென்று நம்புவது வெறுங் கனவே. பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு முதலில் மனம் சாந்த

மாக இருக்க வேண்டும். சாந்த முள்ள மனதிற்கு மகத்தான ஆற்றலுண்டு. சாந்த மனமும் புத்தியும் செய்யவேண்டியதைச் செய்து; தவிர்க்க வேண்டியதைத் தவிர்த்து வருமாகில் நல் வாழ்விற்கு வழியுண்டு. சாந்தமில்லாத மனம் சதா சுழன்று கொண்டு பிரபஞ்ச வாழ்விற்சிக்கித் துன்பம் நிறைந்த காட்டைத் தனக்கு இல்லிடமாகச் செய்கிறது. இத்துன்பக்காட்டை அழிப்பதற்கு ஞானக்கினி ஒன்றினுற்முன் முடியும். மெய்ஞ்ஞானம் விசாரணையால் உண்டாகிறது.மெய்ஞ்ஞானம் அன்பையும் அறனையும் பேணிக்காத்துச் சாந்தி நிலைக்கு வழி காட்டுகிறது.

மனிதன் மற்றவர்களுடன் சேர்ந்து வாழவேண்டியிருக் கிறது. மனம் அடிக்கடி சிதறுவதால், தீயவுணர்ச்சி வசப் பட்டு மனிதன் மற்றவர்களுடன் சாந்த மாகவுஞ் சந்தோஷ மாகவும் வாழ்க்கையை நடாத்தத்தவறுகிருன். பொதுவாக யாரையும் திடீரென வெறுத்தலும் விரும்புதலு மாகிய செயல்கள் இடம் பெறுகின்றன. இன்பங்கண்டதும் உல் லாச புரியின் உச்சியில் இறுமாந்து மனிதன் வாழ்கிருன். அடுத்த கணம் துன்பம் வந்ததும் வாழ்க்கையைத்துயர் நிறைந்த பாலைவனமென்று எண்ணுகிருன். இவ்விருமனே நிலையும் மாற வேண்டும். மனிதவாழ்வு ஆன்ம விடுதலைக்கு ஓர் ஒப்பற்ற சந்தர்ப்பமென்று பேரறிஞர்கள் கருதுகிருர்கள். இது உண்மையான தீர்ப்பு.

மனிதனின் பகுத்தறிவிற்கு அப்பாற்பட்ட சில நிகழ்ச்சிகள் ஏற்படும் போதும், வாழ்வில் உண்டாகும் இன்னல்களைச் சமாளிப்பதற்குத் திறமையை இழக்கும் போதும், பெரும் மாற்றங்கள் உண்டாகின்றன. துக்கத்தினுற் பீடிக்கப்பட்ட இம்மானிட வாழ்வின் பயன்யாது? நாம் ஏன் பிறந்தோம், மரணத்துக்குப் பின் எங்கு செல்வோம், எப்படியிருப்போம், என்ற பலவித கேள்விகள் மனதில் உதிக்கின்றன. இவையெல்லாம் மனிதனின் ஆன்ம விடுதலைக்கு உதவி புரிகின்றன.

என்னுடைய நிலையை இங்கு எடுத்துக் கூறுவது மிகையாகாது. இளமையில் என் தாய் தந்தையரை அடியேன் இழந்து துன்பத்தினுல் நொந்து, வாழ்வு என்பதின் மர்மம் யாதென அறிய ஆவலுற்றேன். இறத்தல் பிறத்தல் ஆகியவைகளின் இரகசியத்தை அறிய வேண்டும் என்ற ஆர்வம் வர வர உள்ளத்தில் வேர்விட்டு வளர்ந்து கொண்டேயிருந்தது. உலக வாழ்வு அநித்தியமானது, கசப்பானது, மயக்கம் நிறைந்தது என்ற அரிய உண்மைகளையெல்லாம் என் இளம் பிராயத்தில் அநுபவரீதியில் அறிந்து உணரலானேன். மேலும் வாழ்வில் இன்பதுன்பத் தாக்குதல்களுக்கு ஆளாகி, தத்துவ ஆராய்ச்சி மூலந்தான் வாழ்வில் ஏற்படும் எல்லாவிதச் சிக்கல்களையுந் தீர்க்கமுடியுமென்ற நோக்கத்தோடு நான் பல ஞான சம்பந்தமான நூல்களைப் படித்துச் சிந்திக்கலானேன்.

இவ்விதமாக எல்லாவற்றையுந் தத்துவக் கண்ணோட்டத்திற் கவனித்துக் கொண்டிருக்குங் காலத்தில், என் பிறவியின் இன்னல் தீர்க்கத் தண்ணருள் வடிவங்கொண்ட சற்குரு நாதனைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றேன்.

அத்வைத ஞானத்திற்குப் பீடமானவரும், தவசிரேஷ்டர்களுக்கு அருள் நோக்கை அருளியவருமாகிய சற்குரு தாளையான் ஆண்டவர்களை என் இளம் பிராயத்திலிருந்து தரிசித்து வரலானேன். அத்தருணம் அவர்களுடைய மகிமையை எளியேன் அறிந்திலேன். இங்ஙனம் தரிசித்து வருங்காலத்தில், மெல்ல மெல்ல அவர்களின் தன்னலமற்ற தூய அன்பும் பகுத்தறிவுக்குப் பொருத்தமான மெய்ஞ்ஞான மொழிகளும் என்னைக் காந்தம்போற் கவர்ந்தன. ஞான நூல்களைப் படித்தலும், சந்தர்ப்பங்கிடைக்கும் பொழுதெல்லாம் தாளையான் பாவா அவர்களைத் தரிசித்தலும் என் வாழ்வில் முக்கிய நிகழ்ச்சியாக இருந்தது. இப்படியாய் நடந்து வருங்காலத்தில் ஒரு நாள் என்னைப் புன்முறுவலுடன் நோக்கிப் பின்வருங் கவியை யெழுதி யெனக்குக் கொடுத்தார்கள்.

நினைவை விடுமின் நிர்மல மாகுமின்
கனவைத் தொலைமின் கடைவெளி புகுமின்
(எசமானும் அடிமையுமற்ற அறிஞன்)

இதுதானு நீ படிக்கும் ஞானநூலின் சாராம்ச மென்று வினவினர்கள். அவ்வண்ணமே அமைந்திருக்கிறதென்று பணிவுடன் விடை பகர்ந்தேன். நினைவு உதயலயமாகிற இடத்தைச் சந்தேகமற அறிந்து அதில் தரிபட்டு வாழ்வதே மெய்ஞ் ஞான வாழ்வின் முதற்படி யெனப் பின்பு ஆண்டவர்களின் கருணையால் அறியலானேன். எசமானும் அடிமையுந் தோன்றுமிடம் துவிதநிலையென்றும், அத்வைத நிலையிற் கேட்டல் கொடுத்தல் ஆகிய தொழில்கள் இல்லையெனப் பிற்காலத்தில் அறியலானேன்.

சற்குரு தாளையான் ஆண்டவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புக்கிட்டியதினுல் தியானத்தில் விருப்புற்றுப் பழகலானேன். மேலும் அவர்களது உறுதியான மொழிகளாலும், உபதேசத்தினுலும் எனக்கு நாளுக்கு நாள் மனச்சாந்தியும், சாதனையில் தீவிரமாக முன்னேற வேண்டு மென்ற உறுதிப்பாடும் உண்டாயின. ஆத்மார்த்த அந்தரங்க வழியின் முக்கிய இரகசியத்தை விளங்கும் ஆற்றலும் ஏற்பட்டது. அவர்களின் புனிதத் தொடர்பால் என்வாழ்வு ஞான வாழ்வாக மாறியது. தெய்வீகப் பண்பையும், அத்வைத நிலையையும் அடைய வேண்டுமென்ற தாகந் தானுக உண்டாயிற்று. மனித வர்க்கம் ஞான நெறியில் முன்னேறி விளங்க வேண்டு மென்ற சிந்தனையும் உண்டாயிற்று. ஆத்மஞானத்தைச் சாதி மத பேதம் பாராது பரிபக்குவம் உடையவர்களிடம் பரப்ப வேண்டு மென்ற சீரிய கொள்கையுடன் வியாங்கொடையில் **சாந்தி நிலயம்** என்ற பெயருடன் ஓர் ஸ்தாபனத்தை ஆரம்பித்திருக்கிறேன். இதை ஒரு அன்புத் தொண்டாகவே ஆற்றிவருகிறேன்.

சற்குரு தாளேயான் பாவா அவர்களின் மகிமையைச் சுட்டறிவின் துணைகொண்டு அளவிட முடியாது. சுட்டற்ற மோனத்தைச் சுட்டி உணரவல்லார் யார்? தன்மயமாய் விளங்கும் பரிபூரண நிலையை எய்திய மோனவள்ளல் தாளேயான் பாவா அவர்கள் பரிபக்குவமடைந்த சீடர்களுக்கு தமது பரிச தீட்சையால் மோனநிலையை உணர்த்தினர்கள். சதா சகஜசமாதியிலிருந்து கொண்டு எல்லா நற்பணிகளையும் இயற்றிவந்தார்கள். அவர்களின் ஞானவாழ்வு அவர்களைத் தரிசித்த பக்தர்களுக்கும் மற்றவர்களுக்கும் பெரும்பயனை நல்கியது. அவர்களுடைய வாழ்வு தவசிரேஷ்டர்களுக்கு ஓர் முன்மாதிரியாய் அமைந்திருந்தது. பன்னிரு வருடகாலம் முத்துப் பேட்டையில் யாரையும் எதிர்பாராது, மெய்ஞ் ஞான தவமியற்றி அரும்பேறு பெற்றவர்களென அன்னரின் சரிதம் எடுத்துக் கூறுகிறது. அவர்களுடைய புனிதத் தொடர்பால் யோகிகள் ஞானநிலை எத்தகையதென உணர்ந் தனர். இறைநேசர்கள் பக்திப்பரவசத்தால் இன்பநிலை எய் தினர். உலக வாழ்வில் துயருற்ருேர் துயர்நீங்கி மறுமலர்ச்சி அடைந்தனர். ஞானவழியில் வரும் பெருந் தடைகளை அன் ஞரின் கருணையாலும் திருநோக்காலும் எளிதில் தாண்டி மகிழ்ந் தனர் பலர். வேறுயாரிடமுங் காணமுடியாத ஒருவித தெய் வீகப் பிரகாசம் அவர்களிடம் ஜொலித்துக் கொண்டே யிருந்தது. ஞானனுபூதியின் அந்தரங்க நுட்பங்களை வெகு தெளிவாக விளக்குவது அவர்களது தெய்வீக திருவிளையாட

லாக அமைந்திருந்தது. அவர்களிடம் தஞ்சம்புகுந்த அன்பர் களுக்குச் சாதிமத பேதம் பாராட்டாது உபதேசஞ் செய் தார்கள். தாஸீயான் ஆண்டவர்களின் உடல் அருட்சோ தியின் வடிவாக, அமைதியின் இருப்பிடமாக, தெய்வீகக் கவர்ச்சியின் காந்த நிலையமாக விளங்கியது. ஷெய்கு நெய்னு முகம்மது தாஸீயான் பாவா அவர்களின் தோற்றம் 1955-ம் வருடம் ஆகஸ்ட் மாதம் மூன்ருந் தேதி இப்புவியினின்று மறைந்தது. அன்னுர்களது தர்ஹா என்ற சமாதிபீடம் கந்தவளை எஸ்டேட், ரத்மலானை விமான நிலையத்திற் கருகா மையில் அமைந்துள்ளது. சாந்தியின் பொருட்டு அன்பர்கள் தினமும் அப்புனித பீடத்தைத் தரிசித்து வருகிருர்கள். அவர் களது திருக்கருணை யாவர்க்கும் உண்டாகுக!

தாஸீயான் பாவா ஆண்டவர்களின் மறைவிற்குப் பின் அன்னுரின் பிரதான சீடர்களான அல்ஹாஜ் அப்துல் கரீம் சாஹிபு பாவா அவர்களுடனும், இந்நூலுக்கு மிக அன்புடன் சிறப்புரை வழங்கிய உயர்திரு சி அருணுசலம் அவர்களுடனும் நெருங்கிப் பழகலானேன். குருநாதனின் திருக்கருணைக்கு முற் றிலும் ஆளாகிய இச்சாதுக்களை நான் சந்திக்கும் போதெல் லாம் நுணுக்கமான ஆத்மார்த்த அந்தரங்க விஷயங்களைப் பற்றி வெகு தெளிவாக ஆராய்வது வழக்கம். இவ்விதம் அவர் களுடன் பல தடவைகளில் நடாத்திய ஞான சம்பந்தமான உரையாடல்களில் நிகழ்ந்த கருத்துக்களை ஆதாரமாக வைத்து

நான் இந்நூலை எழுதலானேன். மேலும், இந்நூல் இயற்று தற்கு உதவியாக இருந்து உற்சாகங் காட்டி ஒத்துழைப்பு நல்கிய இவர்கள் இருவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஞான சாதனையில் ஈடுபடும் ஆத்மீக சாதகர்கள் சிறந்த முறையில் பயனடைவார்கள் என்ற நன்னோக்கத்தோடு இந் நூலை அடியேனின் சற்குரு தாளையான் பாவா ஆண்டவர்களது திருவடிகளில் பக்தியுடன் சமர்ப்பிக்கின்றேன்.

Dr. K. M. P. முகம்மது காசிம், Ph. D.,

Perfect Peace Lodge,
P. O. Box 11.
Veyangoda, (Ceylon.)
24-1-1971.

# சிறப்புரை

மனிதவர்க்கத்தை ஈடேற்றும் பொருட்டுக் காலத்துக்குக் காலம் ஞானுனுபூதி பெற்ற மகான்கள் உலகத்தில் தோன்றிச் சன்மார்க்க நெறிகளை வகுத்து மேலும் அந்நெறிகளிலிருந்து வழுவாது வாழும் முறைகளை உபதேசிக்கிருர்கள். அந்நெறிகள் பலவித மெனினும், பகிரங்கம், அந்தரங்கம் என்னும் இருபகுப்புக்குள் அடங்கும். ஒவ்வொரு மதமும் பகிரங்கத்தையும் அந்தரங்கத்தையும் பிரஸ்தாபிக்கின்றது. பகிரங்கம் வெளிப்படையானது. அந்தரங்கம் இரகசியமானது. எம்மதத்துக்கும் ஞானநெறியே அந்தரங்கமாகும்.

மனிதன் சடப்பொருள்களின் இரகசியத்தை அறிவதற்குச் சதாமுயன்று கொண்டிருக்கிருன். சடப்பொருள்களின் இரகசியத்தையுஞ் செயல்களையும் அறிவது மெய்ஞ்ஞானமாகாது. அது பாசஞானத்தைச் சேர்ந்தது. சுட்டறிவால் உண்டாவது. பந்தம் நிவிர்த்தியாகாது. சடப்பொருள்களை அறிவது மனிதனின் உணர்வு. சடப் பொருள்கள் மனிதனையோ அல்லது அவனின் உணர்வையோ அறியா. இதற்கிணங்க, கைவல்லிய நவநீதமென்னும் ஞானநூலிற் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது.

அறிபடு பொருணீ யல்லை
அறிபடாப் பொருணீ யல்லை
அறிபொரு ளாகு முன்னை
அனுபவித் தறிவாய் நீயே

குறிப்பு:-

உன்னால் அறியப்படும் பொருள் நீயல்லை. நீ உன்னால் அறியப்படாத பொருளாமெனின் சூனியமாம். சூனியஞ் சடமாதலின் நீயல்லை. இவ்விரண்டையும் (அறியப்படும் பொருளையுஞ் சூனியத்தையும்) அறிவது மெய்யுணர்வாதலின் அதுவே நீயாம். அங்ஙனமாகிய உன்னை நீயே அனுபவித் தறிதி. நீ சொல்லளவாகவும், நினைவளவாகவும் போகாதே யென்பார், அனுபவித்தறிவாய் நீயே யெனவுங்கூறினார்.

அந்தரங்கமென்பது இரகசியமென்று முன்பு கூறினோம். எல்லாவித இரகசியங்களிலும் பார்க்க மேலான இரகசியம் மனிதனின் உள்ளுணர்வே. எல்லா இரகசியங்களையும் அறிவது இவ்வுணர்வே. தன்னைத்தான் உணர்வதுவும் இவ்வுணர்வே. இவ்வுணர்வு தன்னைத்தான் உணர்ந்த விடத்து, தேகாதி தத்துவங்களுக்கு வேறாகிச் சாட்சியாய் சுயப்பிரகாசமாய் நிரந்தரமாய் விளங்குகின்றது. ஞானசற்குருவின் கருணையாலும் உபதேசத்தாலும் இவ்வான்ம ஞானத்தை ஐயந்திரிபற அனுபவத்தில் அறிந்து அதன் பின்பு சாட்சி சாட்சியம் ஆகிய இரண்டும் நழுவிவிளங்கும் ஏகபரிபூரண நிலையெனப்படுவது யாதோ அதில் தரிபட்டு வாழ்தலே ஆத்மார்த்த அந்தரங்க வழியின் முக்கிய நோக்கமாகும்.

"ஆத்மார்த்த அந்தரங்க வழி" யென்ற இந்த ஞானநூல் மேற்கூறிய விஷயங்களை இலகுவாக விளங்கக் கூடிய வகையில் விபரமாக எடுத்துக்கூறுகின்றது. இதை அறிஞர் K. M. P. முகம்மது காசிம் அவர்கள் இயற்றி

எனது பார்வைக்கு அனுப்பிவைத்தார்கள். இதற்காக அவர் களுக்கு எனது உள்ளங்கனிந்த நன்றி. K. M. P. முகம்மது காசிம் அவர்கள் தாஃளயான் ஆத்மார்த்த அந்தரங்கக் கூட்டத்தைச் சார்ந்தவரும் வியாங்கொடையில் அமைந்த சாந்தி நிஃலயத்தின் ஸ்தாபகரும் தஃலவரும் ஆவர்.

இவர்கள் இளம் பிராயத்திலிருந்தே ஞான சற்குரு தாஃளயான் சுவாமிகஃளத் தரிசனஞ் செய்து வந்தார்கள். நாளடைவில் அவர்களுடைய திருக்கருணைக்கு ஆளாகினுர்கள். ஞானநெறியில் முன்னேறுவதே இவர்களது வாழ்வின் இலட்சியமென ஒழுகிவருகிருர்கள். சற்குருநாதனின் மறை வுக்குப் பின்பு சாதி மதபேதம் பாராது ஞான நெறியைப் பரப்புவது தனது சிறந்த கைங்கரியமெனக் கொண்டுள் ளார்கள்.

இவர்களால் இயற்றப்பட்ட இந்நூல் கடவுஃள அடைய வேண்டுமென்னும் ஆன்மதாகங் கொண்டவர்களுக்குப் பேரு தவியாக விளங்குமென்று திடமாக நம்புகிறேன். அன்பர்கள் இந்நூஃல அமைதியுடன் வாசித்துச் சிந்தித்துத் தெளிந்து பரமப் பிரயோசனத்தை அடைவார்களாக!

இங்ஙனம்
சி. அருணுசலம்
(தாஃளயான் ஆத்மார்த்த அந்தரங்கக் கூட்டத்தவர்.)

178, டாம் வீதி,
கொழும்பு-12
1—1—1971

பின்வருங் கவிகள் அருள்நிட்டையைப்
பற்றி விளக்குகின்றன.

---

நினைவொன்று நினையாமல் நிற்கின் அகமென்பார்
நிற்குமிட மேயருளாம் நிட்டையரு ளொட்டுந்
தனையென்று மறந்திருப்ப அருள்வடிவா னதுமேல்
தட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
பினையொன்று மிலையந்த இன்பமெனும் நிலையம்
பெற்றுரே பிறவாமை பெற்றுர்மற் றுந்தான்
மனையென்றும் மகவென்றுஞ் சுற்றமென்றும் அசுத்த
வாதனையாம் ஆசையொழி மன்ஞெருசொற் கொண்டே.

(தாயுமானசுவாமிகள் பாடல்)

மோன மொழியறிந்து மோனநிலை யுற்றுர்க்கு
மோனமன்றி உண்டோ மொழி

(தனிப்பாடல்)




# ஆத்மார்த்த அந்தரங்க வழி

---

## சற்குரு வணக்கம்

அழியா வவித்தை யழிந்தொழிய ஞான
விழியா லெரிக்கும் விமலன்—மொழியதனை
நெஞ்சே நினைந்துருக நீங்காக் குருபரன்றன்
கஞ்சமலர்த் தாளே கதி.

மனிதனின் மனோசக்தியும் புத்திசாதுரியமும் மிகவும் மகத்தானவை. இவைகளைப் பயன்படுத்தி மனிதன் விஞ்ஞான வுலகில் அதிசயிக்கத்தக்க விதத்தில் முன்னேற்ற மடைந்து கொண்டிருக்கிறான். விஞ்ஞானத் துறையில் முன்னேற்ற மடைந்தாலும், மனவமைதியின்றி, ஆன்ம நாட்ட மின்றி, மனிதன் துன்பத்திலேயே வாழ்கிறான். மனச்சாந்தியும் ஆன்ம ஞானமும் இல்லாவிடத்து விஞ்ஞானம் பேராசைக்குந் துக்கத்துக்குமே வழி

வகுக்கின்றது. துக்கம் நீங்கி மனச்சாந்தி பெறுவதற்கு ஆத்மார்த்த அந்தரங்க வழியை மனிதன் அறிந்து ஞானனுபூதியை யடைதல் வேண்டும். இதுவே தீர்ந்தவழி.

## ஆத்மா என்பது யாது?

யதார்த்தமான உள்ளுணர்வு ஆத்மாவென்றும், மெய்ஞ்ஞான மென்றுங்கூறுவர். ஞானமென்றாலும், அறிவென்றாலும், போத மென்றாலும் அர்த்தம் ஒன்றே. மனோசக்தியாலும் புத்தி சாதுரியத்தாலும் நாம் உள்ளுணர்வாகிய ஆத்மாவை அறிய முடியாது. நல்லொழுக்கமும் ஞான சற்குருவின் கிருபையும் ஆன்மாவை அறிதற்கு இன்றியமையாதன. பின்வருங்கவி இவ்விஷயங்களை தெளிவாக எடுத்துக் கூறுகிறது.

### நேரிசை வெண்பா

நல்லொழுக்க மில்லாது ஞானநூ லோதியும்
நல்லபய னில்லை நயந்துகேள்—நல்லொழுக்கம்
ஞானமுற நற்சங்கஞ் சேர்த்து விசாரத்தை
ஊனமற ஆட்டு முவந்து.

(தனிப்பாடல்)

குறிப்பு:-

நல்லபயன் — நல்லபிரயோசனம். நயந்துகேள் — விரும்பிக் கேள். நற்சங்கம்—சாதுசங்கம். விசாரம்—ஆன்ம விசாரணை. ஊனமற—குற்றம் நீங்க

தீயவொழுக்கத்தை விடுதலும் நல்லொழுக் கத்தைப் பேணிவாழ்தலும் ஆத்மார்த்த சாத னைக்கு முதற்படியாகும். நல்லொழுக்கம் ஸ்திரமா வதற்கு நற்குண நற்செய்கையுடைய சாதுக்களின் சகவாசம் வேண்டும்.

நல்லொழுக்கஞ் சித்தசுத்தியை உண்டாக்குகிறது. அழுக்குப் படிந்த கண்ணாடியிற் பிரதிபிம்பம் தெளிவாகத் தோன்றாத வாறுபோலச் சித்தசுத்தி இல்லாவிடத்து ஞானம் சுயமாகப் பிரகாசிக்காது.

ஞானகுருவின் கருணையாலுஞ் சகவாசத்தாலுஞ் சாதகனுக்கு அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் முதலியன நீங்குகின்றன. அஞ்ஞான மென்பது தனதுண்மையான ஞான சொரூபத்தை அறியாத் தன்மை. சந்தேகமென்பது சற்குருவின் உபதேச மொழியை நம்பாமற் கலங்கிய மனத்தின் தன்மை.

விபரீதம் என்பது ஒன்றை வேறொன்ருகப் பார்க்கும் சித்தவிருத்தி. இது நிலையில்லாத உலகையுந் தேகாதி விடய போகங்களையும் நிலையுடையன வாகக்கருதி மனத்தில் விளைந்த மோகம். ஆசான்பாற் கேட்ட வாறு நிஷ்டை கூடுதலால் அஞ்ஞானம் நீங்கும். ஞான குருவின் உபதேச மொழிகளை யுத்தியுடன் சிந்திப்பதாற் சந்தேகம் நீங்கும். அங்ஙனம் நீங்கிய விடத்துப் புத்தி தெளிவடையும். தெளி வடைதலாற் சர்வ கற்பனைகளும் இறந்து சதோதய மாக விளங்கும் ஏகாந்த தரிசனம் உதயமாகி விபரீதம் நீங்கும்.

ஆத்மார்த்த அந்தரங்கத்தை ஞானனுபூதிவாயி லாகவே அறிதல் வேண்டும். அடைதல் வேண்டும். நேர் அநுபூதியை அடைவதற்குத் தியானம் மிகவும் முக்கியம். ரூபத்தை அறிவதற்குக் கண் எங்ஙனம் அவசியமோ அதுபோல நிரந்தரத் தியானம் ஞானனுபூதிக்கு மிகவும் அவசியம். சதா சலித்துக் கொண்டிருக்குஞ் சிந்தையை ஒருவழிப்படுத்திக் குறிப்பிட்ட இலட்சியத்தில் மனதைப் பதிய வைத் தல் வேண்டும். இப்படியிடைவிடாப் பழக்கத்தால்

ஒடுஞ்சிந்தை ஓடாது அமைதியுறுகின்றது. அமைதி யுடைய மனதிற்கு மகத்தான சக்தியுண்டு. இங் ஙனம் அமைதியுற்று, ஏகாக்கிரம் அடைந்தமனமே விசாரணைக்குத் தகுந்தது. மனம் ஏகாக்கிரம் அடையாவிட்டால் ஞான விசாரணை நஞ்சு போல் தோன்றும். ஆதலால் ஏகாக்கிர சிந்தை விசார ணைக்கு அத்தியாவசியமாம். மேலும் விசாரணையைப் பற்றிப் பின்வருங்கவி எடுத்துரைக்கிறது.

### நேரிசை வெண்பா

**தக்க விசாரத்தால் உள்ளுணர்வு தான்றோன்றும்**
**மிக்க வநுபூதி மேலோங்குந்—துக்கமய**
**மோகமற்று மோனநிலை பெற்றுய்யத் திண்மைதருந்**
**தாகமுற்று நின்றவர்க்கே தான்.**

(தனிப்பாடல்)

குறிப்பு:-

தக்கவிசாரத்தால்—தகுந்த ஆன்ம விசாரணையால். உள்ளுணர்வுதான் தோன்றும்–உடம்புக்குள்ளே இருக்கும் உணர்வு உடம்புக்கு வேருகத் தோன்றும். மிக்கவநுபூதி மேலோங்கும்–அங்ஙனம் தோன்றிய உணர்வில் மனம் சதா இருக்குமாகில் மேலான ஞானனுபவம் உண்டாகும்.

துக்கமய மோகமற்று–துக்கத்தை விளைவிக்கும் ஆசைநீங்கி, திண்மை தரும்—வலிமையைத்தரும். தாகமுற்று நின்ற வர்க்கு—ஆன்மதாகங் கொண்டு பலவிடையூறுகள் நேர்ந் தாலும் பொருட்படுத்தாது ஆன்மநாட்டத்தில் தளராது நின்றவர்களுக்கு.

உலகமென்பது யாது? உலகத்தை அறியும் நான் யார்? இறைவன் என்பதற்குப் பொருள் யாது? மேலும் ஒன்றினுக்கொன்றுள்ள சம்பந்தம் யாதென ஞானிகளிடம் சந்தேக விபரீதமற விசாரித்தல் ஆன்ம விசாரணையெனப்படும். ஞானி களிடம் விசாரித்தலே உண்மையான ஆன்ம விசா ரணையாகும். வேறு விசாரணை ஆன்ம விசாரணை யாகாது. ஞானமும் உண்டாகாது. பந்தமும் நீங்காது.

சடப்பொருளை உணர்வது நாம். சடப் பொருள் நம்மை உணராது. ஆதலால் நமது சுய வடிவம் உணர்வு. பொருட்களை எது உணருகின்ற தோ அது உணர்வெனப்படும். உணர்வே அறிவு. ஆதலால் உணர்வு வடிவாகிய நமது சுயரூபத்தை நாம் முதலில் அறிதல் வேண்டும். இங்ஙனம் தனது

உணர்வை அறிதலே தன்னை அறிதலாகும். தன்னை அறிந்த பின்புதான் தலைவனை அறியலாம். நம்மை உணர்வு வடிவாக அறிதற்குத் தடையாக விருப்பது நமது சங்கற்பம். சங்கற்பம் என்பது நினைவு.

## மூன்று அவஸ்தைகள்

சாதாரணமாக நாம் மூன்று அவஸ்தைகளில் சீவிக்கிறோம். அவஸ்தை என்றால் நிலை, அதாவது உயிரின் நிலை. மூன்று அவஸ்தைகளாவன (1) சாக்கிரம் (விழிப்பு நிலை) (2) சொர்ப்பனம் (கனவு) (3) சுழுத்தி (கனவு தோன்றாத தூக்கம்). இம்மூன்று அவஸ்தைகள் தினமும் மாறி மாறித் தோன்றுகின்றன. இம்மூன்று அவஸ்தைகளையும் மாற்றங்களையும் அறிவது உணர்வே. நம்மால் அறியப்படும் அவஸ்தைகள் எதுவும் நாமல்ல. அவஸ்தைகள் நம்மை அறியா. நாம் அறிதலால் நாமே உணர்வு வடிவாகிய அறிவு.

நினைவு நாமரூப விவகாரங்களில் ஈடுபடும் பொழுது சாக்கிரமுஞ் சொர்ப்பனமுந் தோன்றுகின்றன. சாக்கிரமென்பது சாதாரண விழிப்பு

நிலையாகும். இவ்விழிப்பு நிலையில் மனம் உலக விவகாரங்களிற் சென்றுழன்று சஞ்சரிக்கின்றது. இதனுற் களைப்படைந்த மனம் ஓய்வடைவதற்காகத் தூக்கத்திற்குச் செல்கின்றது. ஆனுற் சம்பூரண ஓய்வடையாததாற் சொர்ப்பனம் தோன்றுகின்றது. சொர்ப்பனத்தின் மூலகாரணம் யாது? விழிப்பு நிலையில் விவகாரத்தாற் களைப்படைந்த மனம் தூக்கத்திற் பூரண ஆறுதலடையாததினுல் மறுபடியுஞ் சாக்கிர வாசனையுடன் உள்ளதையும் இல்லதையும் எண்ணிறந்த சாயா ரூபத்தில் தோற்றுவிக்கின்றது. இச்சாயாரூப நிலையையே சொர்ப்பனமெனவுங் கனவெனவுங் கூறுவர்.

நினைவு நாமரூப விவகாரத்தை மறந்து பூரணமாக ஒடுங்கியவிடம் பாழாகிய சுழுத்தி நிலை. இந்நிலையில் எவ்வித நாமரூபங்களும் தோன்ரு. இதைச் சீவப்பாழென்றுஞ் சூனியமென்றுங் கூறுவர்.

கனவற்ற இத்தூக்க நிலையிலேயே நாம் தினமும் உலகப்பிரச்சினைகள் யாவையும் மறந்து ஓய்வு பெறுகிரேம். ஆனுல் இது உண்மையான அறிவு

நிலையில் நிகழும் ஓய்வு அல்ல. ஏனெனில் நம் உணர்வு பாழ்மயமாக மயக்க நிலையில் இருக்கிறது. இந்த மயக்க நிலை அஞ்ஞானத்துடன் கூடியது. இவ்விடத்தில் உணர்வு தன்னையும் அறியாது, அன்னியத்தையும் அறியாது. இது விரும்பத்தக்க நிலையல்ல.

## துரிய நிலை

ஆன்மசாதனையில் வெற்றியடைய வேண்டுமாகில் நாம் பாழைக்கடந்து, துரிய நிலையை அறிந்து, அவ்விடத்தில் வாழப்பழகவேண்டும். நினைவினுற் சாக்கிரமுஞ் சொர்ப்பனமும் உண்டாகிறதென்றும், நினைவின் ஓய்வினுற் பாழாகிய சுழுத்தி நிலை தோன்றுகிறதென்றும் முன்பு கூறினோம். சுழுத்தியைக் கடந்த துரிய நிலையை அடைதற்குச் சங்கற்ப நாசம் உண்டாகவேண்டும்.

சங்கற்பம் எங்கேயிருந்து தோன்றுகிறதென்று அனுபவத்தில் நாமறிந்தாற்றான் ஆன்ம தரிசனம் கைகூடித் துரிய நிலை விளங்கும். துரியம் என்பது நாலாவது நிலை. அதாவது சாக்கிரஞ் சொர்ப்பனஞ் சுழுத்தி மூன்றும் நழுவி விளங்கும் உண்மை நிலை. மேலும் இந்த மூன்று நிலைகளுக்கும் ஆதார பீடமாய்த் திகழ்வதுவுந் துரியமே.

எதனுலும் பாதிக்கப்படாத, எப்பொழுதும் எவ்வித மாறுதலும் ஏற்படாத, இந்தச்சாட்சி மயமான துரியத்தின் முன்னிலேயிலேதான் மனத்தின் அசைவிஞலுஞ் சேட்டையினுலுஞ் சாக்கிரம் சொர்ப்பனம் சுழுத்தியாகிய இம்மூன்றுந் தோன்றித் தோன்றி மாறுகின்றன. இம்மாற்றத்தையும் துரிய நிலேயாகிய அறிவே அறிகிறது.

சாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தி, துரியம் ஆகிய நிலேகளேப் பற்றி பின்வரும் நேரிசை வெண்பா தெளிவாகக் கூறுகிறது.

**நனவில் தசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போங்**
**கனவில் மனக்கூத்துங் காண்போம்—நினேவில்**
**சுழுத்தியிலே இல்லாத சூனியக் கூத்தாடி**
**விழுப்பொருளா நாமிருப்போ மே.**

—சொரூபசாரம்

குறிப்பு:-

நனவில்—சாக்கிரத்தில். நனவில் தசேந்திரிய நாட்டியங்கள்—அனுதினமும் சாக்கிரத்தில் பத்து இந்திரியங்களுடைய நடனங்களே. (தசம்-பத்து) தசேந்திரியம்—ஞானேந்திரியங்கள் ஐந்தும் கன்மேந்திரியங்கள் ஐந்தும். நினேவில்—நினேவு இல்லாத. நினேவில் சுழுத்தியிலே—நினேவு சற்றும் தோன்ருத

சுழுத்தி நிலையிலே. இல்லாத சூனியம்—தோற்றங்கள் இல் லாத பாழ். விழுப்பொருளா நாமிருப்போம்—மேலான பொருளாக, அதாவது சாட்சியாக நாம் இருப்போம்.

அறிவாகிய சுயஞ்சோதி தோன்றிய விடத்து மனத்தின் சேட்டைகள் நீங்கு மெனக் குணங்குடி வள்ளல் பின்வருங் கவியால் வலியுறுத்துகிறார்கள்.

**உள்ளுயிரி னுள்ளே யுறைந்தபரஞ் சோதிவரிற்**
**கள்ளமனந் துள்ளாதென் கண்ணே றகுமானே.**

## ஆன்மாவை அறிதற்கு அந்தரங்க வழி யாது?

ஞான சற்குருவை அடைந்து அவரின் திருக் கருணையால் ஆன்மாவை அறிதலே உத்தமமான வழி. சீடனின் பரிபக்குவத்துக்கேற்ப அவனுக்கு உபதேசம் செய்து, ஈற்றில் எல்லாமாய் அல்லது மாய் இருந்ததனில் இருந்தபடி இருந்து ஞானசற் குருநாதன் காட்டச், சீடன் அவ்வண்ணம் இருந்து மோன நிலையை உணர்கிறான். ஞான சற்குருவின்

பெருங் கருணையாலே இப்பேறு உண்டாகிறது. இங்ஙனம் அறிதலே உத்தமம். மோனநிலைதான் ஞானத்தின் முடிவு.

மோன நிலையிலிருந்தாற் பிறப்பு, இறப்பு, நீங்குமென்று ஔவைப் பிராட்டி கூறுகிறார்கள்.

மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவா ரிறவார் பினை

(ஔவை குறள்)

மேலும் அருள் வள்ளல் தாயுமான சுவாமிகள் பின்வருங்கவியால் மோன நிலையின் தன்மையை இனிதாக எடுத்து விளக்குகிறார்கள்.

மோன குருவளித்த மோனமே யானந்தம்
ஞான வருளுமது நானுமது—வானுதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
என்றறிந்தேன் ஆனந்த மே.

உரை:—மவுனதேசிகன் உபதேசித்த மவுன நிலையே ஆனந்த மயமாகியும், ஞான வடிவாகிய திருவருளாகியும்,

நாஞகிய ஆன்மாவாகியும், ஆகாய முதலிய பஞ்சபூதங்கள் தங்குதற்கு ஆதாரமாகியும், சங்கற்பம் உதய(லய) மாவதற்கு இடமாகியும் விளங்குகின்றதாக அநுபூதியில் உணர்ந்தேன். இங்ஙனம் உணர்ந்த பின்பு எல்லாம் ஆனந்தமே.

குறிப்பு:—எல்லாமாய் அல்லதுமாயிருக்கும் நிலையை உணர்த்தியது என்க.

ஞான சற்குருவை அடையாதவர்களுக்கு ஒரு சிறந்த வழியை இங்கே யெடுத்துக் கூறுவாம். நினைவு எங்கே தோன்றுகிறதென்று அமைதியாக நினைவையே நோக்கும்போது ஆரம்ப காலத்தில் எண்ணிறந்த தோற்றங்களையும் நினைவுகளையும் அந்த நினைவே சிருஷ்டி செய்து உள்நோக்கைத் தடுக்கிறது. முன்பு புறவுலகிற் சஞ்சரித்துச் சலித்ததுபோல் பின்பும் அந்த நினைவே அகவுலகிற் சுத்த அசுத்த வாசனைகளுடன் கூடி அளவற்ற எண்ணங்களை மாறிமாறி உருவாக்கிக்கொண்டேயிருக்கும். இங்ஙனமான நிகழ்ச்சியினுற் கலங்கித் தளர்ச்சியடையாது சாதகன் மேலும் மேலும் அது உருவாக்கிக்கொண்டிருக்கும் எண்ணங்களையுந் தோற்றங்களையுஞ் சாந்தமாக நோக்க வேண்டும். இடைவிடாப்பழக்கத்திஞலும், ஏகாக்கிர சித்தத்தை

அடைய வேண்டுமென்னுந் தீவிர உறுதிப்பாட்டி ஞலும், நாளுக்குநாள் சன்னஞ் சன்னமாகக் கற்பித உருவங்களெல்லாஞ் சிதைந்து ஏகாக்கிர சிந்தை ஏற்படுகிறது. மேலும் இச்சிந்தையையும் விடாது சாந்தமாய் நோக்கிப் பழகி வரும்போது நினைவு உணர்விலிருந்து தோன்றுகிறதென்பதை அனுப வத்திற் சாதகன் அறிகிருன். இவ்வண்ணம் பழகி வருவதினுற் காலக்கிரமத்தில் உணர்வில் நினைவு சென்று ஒடுங்குகிறது. அங்ஙனம் ஒடுங்கியவிடத்து உணர்வுநாட்டம் உதயமாகிறது.

உணர்விலிருந்து உண்டான நினைவு பகிர்முக மாகி நாமரூபத்தைப் பற்றிப்பிடிக்கும்போது அந்த நினைவை மனேவிருத்தி யென்றும் மனமென்றும் பொதுவாகச் சொல்லுகிருேம். உணர்விலிருந்து உண்டான அதே நினைவு பகிர்முகமாகாது அவ்வுணர் வையே நோக்கித் தரித்திடில் அந்தர் முகநாட்ட மென்று கூறுகிருேம். அந்தர் முகநாட்டத்தை உள் விழிப் பார்வை யென்றுங் கூறுவர். இங்ஙனம் உணர்வைநாடும் நாட்டமே ஆன்மநாட்டம். ஆன்ம நாட்டம் ஸ்திரமாலுல் ஆன்மப் பிரகாசம் உதய மாகிறது. இதுவே ஆன்மதரிசனம். ஆன்மாவை

அறிதலே தன்னையறிதலென்றும் ஆன்ம தரிசன மென்றுங் கூறுவர். இவ்வான்ம தரிசனத்திலிருக் கும் நேரத்தை நாளுக்குநாள் அதிகப்படுத்துவதி ளுல் ஆன்மப்பிரகாசம் மேலோங்கிச் சாக்கிரஞ் சொர்ப்பனஞ் சுழுத்தியிவை மூன்றும் நழுவித்துரிய நிலையனுபவம் வாய்க்கிறது. இத்துரிய வாழ்வே மெய்ஞ்ஞான வாழ்வு, ஆத்மார்த்த வாழ்வும் இதுவே.

## அவதாரிகை

சனகமகாராசன் சுகப்பிரஹ்ம இருஷிக்குச் சந்தேகம்
நீங்கும் பொருட்டு அருளிய உபதேசத்தின் ஒருபகுதி.

அவ்வறிவு சங்கற்பத் தாற்கட்டுண்ணும்
அதுவிடில்வீ டுறுமந்த அறிவுதன்னைச்
செவ்விதினீ யறிந்தனையாற் போகத்திச்சை
செகக்காட்சி அனைத்தினையுந் தீர்த்தியானுய்
எவ்வமற நிறைமனத்தா லடையற்பால
யாவுமடைந் தாய்காட்சிக் கெட்டாதொன்றிற்
கவ்வையற வடைகின்றுய் முத்தனுனுய்
கருத்திலுறு மயக்கமெனுங் கவலைதீர்வாய்.

உரை:—அந்தஞானமானது தனது சங்கற்பத்தினுற் பந்தப்படும். அச்சங்கற்பம் நீங்கினுற் பந்தநிவிர்த்தியாம். அப்படிப்பட்ட ஆத்மஞானத்தை செவ்வையாக நீ இப்போது அறிந்தாயாதலால் போகங்களிடத் தாசையையும், திரிசய திருஷ்டியாவையும் விட்டு நீங்கினுய். துன்பம் நீங்க பூரணமனதினுல் பெறத்தக்க சர்வத்தையும் பிரஹ்மமயமாகப் பெற்ருய், காண்பதற்கு அகோசரமாகிய பரவஸ்துவினிடத்தில் பிரயாசம் நீங்கி இரண்டறக் கலக்கின்ருய், சீவன்முத்தனுனுய், மனதிலுண்டான மாயாமயக்க மென்கின்ற கவலையொன்றினையும் விடுவாய்.

எவ்வம்-துன்பம்; கவ்வையற - பிரயாசம் நீங்கி

திருசியம்—அறியப்படும் பொருள். திருஷ்டி - நோக்கு

குறிப்பு:—யாதொன்று தனது சங்கற்பத்தால் மறைபட்டது போலவும் அதன் விடுதியில் வெளிப்பட்டதுபோலவும் விளங்குகின்றதோ, அச்சைதன்னியமே சர்வமாய் விளங்குகின்றதென்று அறிந்தாற் சந்தேகம் நீங்கும் என்பதாம்.

அந்தரங்க வழி என்ற ஞான நெறியால் உண்டாகும் ஆன்ம நிட்டையைப் பற்றி விபரமாகத் தாயுமானசுவாமிகள் பின்வருங் கவியால் விளக்குகிருர்கள்.

"நினைவொன்றும் நினையாமல் நிற்கின்
அகமென்பார் நிற்குமிடமே யருளாம்நிட்டை"
(தாயுமான சுவாமிகள் பாடல்)

அகம் என்பது நானென்னும் உணர்வு. இந்த வுணர்வே ஆன்மா. இதையே அறிவென்பர். ஆன்மாவுக்கு அறிதலாகியதன்மை யிருத்தலால் அதற்கு அறிவென்னும் பெயருண்டாயிற்று. இவ்வான்மவுணர்விற் சிந்தையற நிற்றலே அருள்நிட்டையென்பர். இவ்வான்ம நிட்டையால் அருள் உதயமாகி மேலோங்குகிறது.

அருள் என்பது ஆன்மாவின் சுயப்பிரகாசம். காலக்கிரமத்தில் இவ்வான்மப் பிரகாசம் உள்ளும் புறம்பும் நிறைந்து அகண்ட வடிவாகக் காட்சியளிக்கிறது. உள்ளும் புறம்பும் ஏகவெளி ஒளியாய் நிற்கும் நிலையைச் சிற்பரநிலை யென்றும், சின்மய வெளியென்றுங் கூறுவர். சின்மயம் என்பது ஞானமயம். கடல் நீர்மயம்; ஆபரணம் பொன்மயம்; குடம் மண்மயம். இவைபோல ஞான சாதகனுக்குச் சடமானவுலகம் அறிவுநாட்டத்திற் சின்மயமாய் விளங்குகின்றது.

சின்மயநிலை மேலோங்கி ஆனந்த நிலையாகிறது. உலகமனைத்தும் நாளடைவில் ஆனந்தமயமாகத் தோன்றும். அதன்பின்பு ஆனந்தாதீத நிலையும் வாய்க்கும். இதுவே தீர்ந்த நிலை. இத்தீர்ந்த நிலை யுடையோரே மகாஞானிகள்.

ஆனந்த நிலையை அடைதற்கு வேண்டிய அந் தரங்க வழி வகைகளைக் கைவல்லிய நவநீதம் என்னும் ஞான நூல் பின்வருமாறு கூறுகிறது.

அசத்தி லெம்மட்டுன் டம்மட்டும்
பராமுக மாகிஞ யம்மட்டும்
நிசத்தி லுள்விழிப் பார்வையாய்
இப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தி லுன்மன நின்றுசின்
மாத்திர வடிவமா கிடின்மைந்தா
கசத்த தேகத்தி லிருக்கினும்
ஆனந்தக் கடல்வடி வாவாயே.

குறிப்பு:-

பராமுகம் — பகிர்முகம் (உணர்வை நாடாது அன்னியத்தை நாடல்). நிசம் — சைதன்னியம் (அறிவென்னும் உண்மை). உள்விழிப்பார்வை-அந்தர் முகநாட்டம், அதாவது தனது எதார்த்த வடிவை விடாது காண்டல். சின்மாத்திர வடிவமாதல் — மனம் சொப்பிரகாசமாக விளங்கல்.

பகிர் முகநாட்டத்தை விட்டு, அந்தர்முக நாட்டத்தில் பழகினுல் மனம் சொப்பிரகாசமாகி ஆனந்த நிலேவாய்க்கு மென்பது தாற்பரியம்.

மேற்கூறியவற்றைச் சுருக்கிக்கூறுமிடத்துச்சாத கன் முதலில் உள்ளுணர்வை ஆழ்ந்த அமைதியான தியானத்திஞல் அறிந்து அதில் வாழப்பழகவேண் டும். இங்ஙனம் வாழப்பழகுதலிஞல் மஞேநாசம் சுலபத்திலேற்படுகிறது. அதன்பின்பு உள்ளும் புறம் பும் அகண்ட வெளியே தாஞகப் பழகவேண்டும். இங்ஙனம் பழகுதலே சகச நிட்டை யெனப்படும். இப்பழக்கத்திஞல் துக்க நிவிர்த்தியும் பரமானந் தப்பேறும் வாய்க்கும். இவ்விதம் வாழ்தலே சீவன் முத்தன் வாழ்வு. இதுவே பரிபூரண திசை. இதுவே மானிட வாழ்க்கையின் தெய்வீகக் குறிக்கோளும் ஆன்ம விடுதலேயுமாகும்.

சீவன் முத்தனின் மகத்துவத்தை எவராலு மெடுத்தியம்ப முடியாதென்று வேதம் முரசறை கிறது. இதற்கிணங்கப் பட்டணத்தடிகளும் பின் வருமாறு கூறுகிருர்கள்.

மறந்தா னறக்கற் றறிவோ
டிருந்திரு வாதனையற்
றிறந்தான் பெருமையை யென்சொல்லு
வேன்கச்சி யேகம்பனே.

(பட்டணத்துப்பிள்ளையார் பாடல்)

குறிப்பு:-

மறம்—தீயகருமங்கள் (அதர்மம்). இருவாதனை—அசுத்தம் சுத்தம் ஆகிய இருவித வாசனைகள். இறந்தான் பெருமையை—மனம் இறந்தான் மகத்துவத்தை.

## சற்குரு உபதேசம் மறவாமை

மானிட தேகத்தை எடுப்பது அரிதில் அரிது. மேலும் நற்கல்வி கேள்விகளில் முயன்று சீரிய ஒழுக்கத்துடன் ஞான சற்குருவை அடைந்து ஞானோபதேசம் பெறுதல் பெறுதற்கரிய பாக்கியம். இவையெல்லாம் கைகூடினும், விவகாரத்தால் துன்பத்துக்கு மேல் துன்பம் வந்த பொழுதும் அஞ்சாது, சற்குருவின் உபதேசத்தை மறவாது, சாதனையில் ஈடுபட்டு முன்னேறுவது செயற்கரிய செய்கையென்றே கூறவேண்டும். சற்றுத் துன்பம்



பிரஹ்மஸ்ரீ செய்கு நெய்னு முஹம்மது
தாளையான் ஆண்டவர்களின்
சமாதி பீடம்.
(ரத்மலானை விமான நிலயத்திற்கு அருகாமையில்)
கந்தவளை, (இலங்கை.)

வந்தவுடன் மதிகலங்கி உபதேசத்தை மறந்து வீண ருடன் கூடி வீண்காலம் போக்குவது எல்லா மயக் கத்திலும் பெரிய மயக்கம். ஆன்மவிடுதலைக்குப் பெருந்தடையாக இருப்பது இந்த மதிமயக்கே. இதைப் பின்வருங் கவி எளிதில் விளக்குகிறது.

சிறந்த வருட்குருவின் தீர்ந்த மொழியை
மறந்த மதியே மயக்கம் — மறவாமல்
எங்குமுறு பூரணத்தி லேகமாய் வாழ்தலே
பங்கமறு மெய்ஞ்ஞானப் பண்பு.

(தனிப் பாடல்)

என்றும் எவ்விடத்தும் இன்புற்றிருக்கும் முறையைப் பின்வரும் பாடல் இனிதாக எடுத்துக் கூறுகிறது. நாமும் அவ்வண்ணம் இருந்து பெறு தற்கரிய பேறைப் பெறுவோமாக!

எங்கு மிருப்ப திறையருள் பூரணம்
அங்கு தங்கிட வானது மங்களம்
பொங்கி விளைந்தது பூரண மங்களம்
எங்குந் தங்குக வெய்துமங் களமே.

ஆத்மார்த்த அந்தரங்கவழி
முற்றிற்று

---

